

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

# குரு அருள் வாழ்த்து.


ஆசிரியர் :
உயர்தவத்திரு. பாலகவி. மீ. கே. வேங்கடராமன்
அவர்கள்




பிரபவ ஆண்டு சித்திரை மாதம் 26-ம் நாள்

**9—5—1987**

உயர்திரு. **T. R. இராமலிங்கம்,**
ஒய்வு பெற்ற கைத்தொழில் ஆசிரியர்,
அரசு மேல்நிலைப்பள்ளி, மணமேல்குடி.

திருமதி. **R. மீராபாய்**

இவர்களின் மணிவிழா நன்னாளில்


வெளியிடுவோர் :
**சற்குருதாசன் டிரஸ்ட்,**
கிளை அலுவலகம் : இரெட்டியப்பட்டி.
நாகலாபுரம் அஞ்சல்-627 904.
வ. உ. சி. மாவட்டம்.

ஓம்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

# முன்னுரை

உலகிற்கு ஒப்பற்ற உயர்நெறி காட்டிய குருநாதர் ஸ்ரீ இரட்டியப்பட்டி சுவாமிகளின் அடியார்களுள் சிறந்தவர்களாகிய உயர்திரு. **T. R. இராமலிங்கம்**, திருமதி. **R. *மீராபாய்*** அவர்களின் அறுபது ஆண்டு நிறைவு மணிவிழா நாளில் **"குரு அருள் வாழ்த்து"** என்னும் இந்நூல் வெளிவருகின்றது. இவ்விருவரும் இல்லறமாம் நல்லறத்தில் பல்லறங்களைப் பேணி வாழ்பவர்.

அவர்கள் இருவரும் அவாவிய வண்ணம் குருநாதர் மீது உயர்தவத்திரு. பாலகவி **மி. கே. வேங்கடராமன் சுவாமிகள்** இயற்றியுள்ள பாடல்களில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து வெளியிடும் வாய்ப்பினை அடிமைக்கு நல்கிய எந்தை குருநாதருக்கும், மணிவிழா காணும் தம்பதியினர்க்கும் நன்றியுடையேன்.

இந்நூலில் அடங்கியுள்ள பாடல்கள் மிகத் தெள்ளிய நீரோட்டம் போன்று அமைந்துள்ளன. எளிமையும், இனிமையும் சேர்ந்து பொலிகின்றன. படிப்பவர்களைப் பரவசப்படுத்தும் பான்மையன. குருநாதரின் அளப்பரும் பெருமைகளை எடுத்துரைப்பன.

அடியார்களும், அன்பர்களும் இப்பாடல்களை ஓதி அருள் வளமும், பொருள் வளமும், மன நலமும், நல்வாழ்வும் பெற்றுப்பல்லாண்டு வாழ்வார்களாக!

மணிவிழா காணும் தம்பதியர் நீண்ட நல் ஆயுளும் குருபக்தியும், சிறந்த அருள் நலமும், பெற்றுப் பல்லாண்டு வாழ எல்லாம் வல்ல குருபரம் பொருளை இறைஞ்சுகின்றேன்.

இங்ஙனம்,
**சு. மங்கையர்க்கரசி,**
பொருளர்,
சற்குருதாசன் டிரஸ்ட்.

இரெட்டியப்பட்டி,
4—5—1987

# மணிவிழா காணுவோர்.



R. மீராபாய் T. R. இராமலிங்கம்

---

## விழாக் குழுவினர்

S. குப்புசாமி சூரியகுமாரி
S. சிவாஜி கிருஷ்ணன் ரேணுகாதேவி
விமலா நாகராஜன்
பிரேமா கோபாலகிருஷ்ணன்
ஜெயந்தி சுரேந்திரகுமார்
T. R. சாரங்கபாணி
T. R. சீனிவாசன்
T. R. V. பாலகிருஷ்ணன்

ஓம்

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

# என் றனரசே

நின்னையணைத் தின்பமுற என்றனரசே - ஏழை
நெஞ்சில்எண்ணி ஏங்குகின்றேன் என்றனரசே
என்னுடல்பொ ருள்உயிரை என்றனரசே - அன்றே
ஈந்திட்டேன்உன் பொன்னடிக்கே என்றனரசே

எண்ணமெல்லாம் நின்வரவை என்றனரசே - நாட
ஏங்கிநின்று வாடுகின்றேன் என்றனரசே
உண்ணமனம் நாடவில்லை என்றனரசே - கண்கள்
உறக்கமும் கொள்ளவில்லை என்றனரசே

எச்செயலைச் செய்வதற்கும் என்றனரசே - உள்ளம்
எள்ளளவும் நாடவில்லை என்றனரசே
சச்சிதானந்தப் பொருளே என்றனரசே - உன்னைத்
தழுவிமகிழ் நாளெந்நாளோ என்றனரசே

பொன்னுலகர் காத்திருக்க என்றனரசே - தவப்
புங்கவர்கள் காத்திருக்க என்றனரசே
என்னைவிழைந் தாண்டுகொண்ட என்றனரசே — என்னை
என்றணைத்தின் பம்கொடுப்பாய் என்றனரசே

அருகிலென்னை யீர்த்தணைப்பாய் என்றனரசே - உண்மை
யன்புமுத்தந் தந்திடுவாய் என்றனரசே
பெருகுகின்ற காதல்வெள்ளம் என்றனரசே - என்னைப்
பித்துடைய ளாக்குதையோ என்றனரசே

எங்கும்நிறைந் தேயிருந்தாய் என்றனரசே - வாடும்
என்னுளும் அமர்ந்திருந்தாய் என்றனரசே
இங்கிவ்வேழை வாட்டம்கண்டே என்றனரசே — முன்னர்
எய்தியின்பம் நல்கொணுதோ என்றனரசே

என்பிழைகள் எண்ணிலவும் என்றனரசே - எண்ணி
என்முன்நீ வரவில்லையோ என்றனரசே
என்பிழைகளும் பொறுத்தால் என்றனரசே - உனக்கிங்
கேற்றமிக எய்துமன்றோ என்றனரசே

உண்மையன்பால் நாடகில்லேன் என்றனரசே - வாக்கோ
டுள்ளம்தூய்மை யெய்தகில்லேன் என்றனரசே
கண்மயக்கம் நீக்கிடுவாய் என்றனரசே - உண்மைக்
காதலின்பம் நல்கிடுவாய் என்றனரசே

இன்சொலுடனே யழைப்பாய் என்றனரசே - என்னைக்
ஈர்த்தணைத்தின் பம்கொடுப்பாய் என்றனரசே
புன்சொல்நினை வாதிதவிர்த் தென்றனரசே - என்னைப்
புணர்ந்துசுகம் கொடுப்பாய் என்றனரசே

கோடிகதிர் போலொளிர்வாய் என்றனரசே - என்னை
கூடியொளி நல்கிடுவாய் என்றனரசே
நாடிவந்த என்னைக்கூடி என்றனரசே - உண்மை
ஞானமணம் கூட்டிடுவாய் என்றனரசே

உன்னையென்னுள் கண்டறியேன் என்றனரசே - காணும்
உள்ளுணர்வை யூட்டிடுவாய் என்றனரசே
என்னையுன்னுள் கூட்டிடுவாய் என்றனரசே - ஒப்பில்
இன்பவமு தூட்டிடுவாய் என்றனரசே

## ஆனந்தக்களிப்பு

என்குரு வாயொளிர் தேவே - எனக்
கேற்றமனைத்தும் வழங்கியாள் தேவே (என்)

அம்மையும் அப்பனுமாகிப் - பள்ளி
யாசானுமாய்க் குரு தெய்வமுமாகிச்
செம்மை யனைத்தும் கொடுத்தாய் - எதற்குச்
செய்நன்றி என்றும் மறக்க கில்லேனே (என்)

யானென்று கேட்க நினைத்தால் — அதை
யான்கேளா முன்னமே யீந்து களித்தாய்
வானென்று முழுமதி போலே — என்னுள்
வாய்த்த அமுத வொளிநில வானாய் (என்)

உணவா யுடைகளு மானாய் — பின்னும்
உல்லாச வாழ்க்கைப் பொருள்பல வானாய்
கணவனாய்க் காதலு மானாய் — ஞானக்
கண்ணொளி யாயுண்மைக் காவலு மானாய் (என்)

மண்புனல் தீவளி வானாய்ப் — பானு
மதியோ டுயிர்வர்க்க மாயமைந் துள்ளாய்
பண்பொடன் பைவளர்க் கின்றாய் — உண்மைப்
பக்திமெய்ஞ் ஞானப் பயிர்வளர்க் கின்றாய் (என்)

சட்ட மெனஒரு மார்க்கம் — தந்தித்
தாரணி யோரைத் திருத்தி யாள்கின்றாய்
திட்டப் படியாவும் செய்தே - உள்ளம்
செம்மை யுறச்செய் யும்வல்லபம் மிக்காய் (என்)

நல்வகை யாமுப வாசம் — அன்பாய்
நல்கிப் படிப்படி யாகத் திருத்திச்
சொல்வகை நாடரு மௌனம் — தந்து
ஆக்கும மாய்ப்பக்கு வம்செய்ய வல்லாய் (என்)

நிட்டானு பூதி வழங்கி — உண்மை
நேசமும் ஞான நிலையும் வழங்கி
எட்டோ டிரண்டரை யென்ன - மாற்றை
ஏற்றிச் சுடரும் செம்பொன்னுக்க வல்லாய் (என்)

உடல்பொரு ளாவி யனைத்தும் - அன்போ
டுன்னடிக் கர்ப்பணம் செய்யடி யார்க்கே
கடல்போல் கருணை வெள்ளத்தை — என்றும்
காட்டிப் புரந்தரு ளும்குரு தேவே (என்)

என்று முலவா நிதியே — உயிர்க்
கென்றென்னு மேவழி காட்டும் பதியே
நன்றோடு ஜீவ நதியே — உண்மை
ஞான மெனும் இசை கூட்டும் சுதியே (என்)

நாதாந்த நாட்டின் வளமே — மேலே
நானென தற்றோளிர் மோன சிகரமே
போதாந்த வீதிப் பொலிவே — ஐந்து
பொறிபுலன் காணரி தாமின்ப நலமே (என்)

வேதாந்த வீட்டின் விளக்கே — ஞான
விண்ணில் விளங்கருட் ஜோதி யொளியே
சூதாண்ட நெஞ்சைத் திருத்த - வந்து
தோன்றிய சற்குரு வாம்திரு வுருவே (என்)

அகர உகரமு மானாய்ப் - பின்னும்
அற்புதம் காட்டும் மகரமு மானாய்
சிகர வகரமு மானாய் - யாரும்
தேடு ரகசியச் சீர்மறை யானாய் (என்)

ஆறுதா ரங்களு மானாய் — அங்கங்
கமைகின்ற சக்தியும் சக்தரு மானாய்
கூறுத மேல்நிலை யானாய் — ஒன்று
கூடச் செய்யும் விந்துநாத முமானாய் (என்)

சத்தி சிவமென வானாய் - உண்மைச்
சாந்தி வழங்கும் சதானந்த மானாய்
முத்தி முடிவுமென் றானாய் - உன்சீர்
மொழியவென் றாலென்றன் நாவொன்று லாமோ (என்)

அன்பர் நினைப்பவை யெல்லாம் - நல்கி
அருளாற் புரக்கும் அருளர சானுய்
இன்ப நிலைக்கே யெனையும் - அழைத்
தேகாந்த மாய்க்கூட எண்ணிடும் தேவே (என்)

வாழ்கநின் ஜோதி வடிவம் - என்றும்
வாழ்கநின் பேரரு ளாம்கடல் வெள்ளம்
வாழ்கஎனக் கூற லன்றிக் கையால்
வழங்கக்கைம் மாறென்றும் கண்டறி யேனே (என்)

## அருள் பெருகும்

இருடியர்பட்டித்
திருநகர்க்கு நீர்
ஒரு முறைவரின்
அருள் பெருகுமே 1

இருடியர்பட்டிக்
குருவை யன்பினல்
உருகி வேண்டிடின்
அருள் பெருகுமே 2

இருடியர்பட்டித்
திருவெனத் திகழ்
ஒருவன் பேர்சொலின்
அருள் பெருகுமே 3

இருடியர்பட்டித்
திருமணாளன் தாள்
ஒருமையால் தொழின்
அருள் பெருகுமே 4

இருடியர்பட்டிக்
குருவை எண்ணினல்
இருவினை கெடும்
அருள் பெருகுமே 5

இருடியர்பட்டி
இருடி பாதமே
வருடு நெஞ்சினில்
அருள் பெருகுமே 6

இருடியர்பட்டிச்
சுருதி நாதன்தாள்
கருதி யேத்திடின்
அருள் பெருகுமே 7

இருடியர்பட்டி
நிருபனைத் தொழின்
கரும நோயறும்
அருள் பெருகுமே 8

இருடியர்பட்டிக்
கிருபை வள்ளலைத்
துருவி நாடிடின்
அருள் பெருகுமே 9

இருடியர்பட்டி
அருணனை நிதம்
தருணத்தால் தொழின்
அருள் பெருகுமே 10

இருடியர்பட்டிக்
கருணை வள்ளல்முன்
இருகை கூப்பிடின்
அருள் பெருகுமே 11

இருடியர்பட்டி
மருவு கற்பகத்
தருவினைத் தொழின்
அருள் பெருகுமே 12

## நெஞ்சொடு கிளத்தல்

காப்போன் ஒருவன் உண்டு பேதைநெஞ்சமே - நீ
கவலைப் படுதல் வேண்டாம் பேதைநெஞ்சமே
பூப்போல் விளங்கிடுவாய் பேதைநெஞ்சமே - அவன்
பொன்னடியை உன்னி உய்வாய் பேதைநெஞ்சமே

அன்பில் மலர்ந்திடுவான் பேதைநெஞ்சமே - அவன்
அருளால் உலகம் உய்யும் பேதைநெஞ்சமே
என்புள் நெருகவைப்பான் பேதைநெஞ்சமே - அன்பர்
இதயந் தனில்உறைவான் பேதைநெஞ்சமே

இருடியர் பட்டிநாதன் பேதைநெஞ்சமே - முன்னோன்
எழில்கண்டு தொழுதுய்ந்தோன் பேதைநெஞ்சமே
பருதி நிகரொளியோன் பேதைநெஞ்சமே - தவப்
பண்பு மிகஉடையோன் பேதைநெஞ்சமே

ஓதா துணர்ந்தவன்காண் பேதைநெஞ்சமே - அவன்
உரையெ லாம்மறையாகும் பேதைநெஞ்சமே
போதா னுபவம்மிக்கோன் பேதைநெஞ்சமே - நம்முன்
புனிதம் மிகப்புரிவோன் பேதைநெஞ்சமே

செல்வ வளம்கொழிப்பான் பேதைநெஞ்சமே – அருட்
செம்மை மிகவிளைப்பான் பேதைநெஞ்சமே
வல்வினை கள்தவிர்ப்பான் பேதைநெஞ்சமே - அருள்
வாழ்வு கொடுத்தருள்வான் பேதைநெஞ்சமே

சட்டம்என் றென்றுகண்டோன் பேதைநெஞ்சமே – அதைத்
தரணிக் களித்துவப்போன் பேதைநெஞ்சமே
நிட்டை முடிவருள்வோன் பேதைநெஞ்சமே - கழல்
நிழலை வழங்கிடுவோன் பேதைநெஞ்சமே

என்றும் அவன்துணைகாண் பேதைநெஞ்சமே - அவன்
இணையடி மறவாதே பேதைநெஞ்சமே
நன்று வணங்கியுய்வாய் பேதைநெஞ்சமே - இது
நல்ல வழியென்றுணர் பேதைநெஞ்சமே

பழுது தவிர்த்துடுவாய் பேதைநெஞ்சமே – அருட்
பண்பை வளர்ந்துடுவாய் பேதைநெஞ்சமே
அழுது தொழுதிடுவாய் பேதைநெஞ்சமே - உனக்
கல்லல் உறுதுகண்டாய் பேதைநெஞ்சமே

# வெண்ணிலாவே

தூயவிண்ணி லேயிலங்கும் வெண்ணிலாவே - என்றன்
சோகம்தீர மார்க்கமுண்டோ வெண்ணிலாவே
நாயகனைக் காணஎண்ணி வெண்ணிலாவே — இங்கே
நாளுமழு தேங்குகினறேன் வெண்ணிலாவே

கருணைவடி வாளனென்பார் வெண்ணிலாவே - என்பால்
கருணையவர்க் கென்றுண்டாமோ வெண்ணிலாவே
அருள்நயந்த வார்த்தைசொல்லி வெண்ணிலாவே - என்றன்
அருகிலவர் என்றமர்வார் வெண்ணிலாவே

சொல்லிலமுதம் சொட்டுமாம் வெண்ணிலாவே — அவர்
சொல்லையென்று கேட்பதோசொல் வெண்ணிலாவே
கல்லையுமு ருக்குமவர் வெண்ணிலாவே - என்றன்
கல்மனத்தை ஏனுருக்கார் வெண்ணிலாவே

எங்குமவர் உள்ளாரென்பார் வெண்ணிலாவே - என்னுள்
எவ்விடத்தி லுள்ளார்சொல்வாய் வெண்ணிலாவே
கங்குல்பக லென்பதின்றி வெண்ணிலாவே - அவரைக்
கலந்துக ளிக்கவேண்டும் வெண்ணிலாவே

கள்ளமில்லா உள்ளமுள்ளோர் வெண்ணிலாவே - அவரைக்
காணலாகு மென்றுரைப்பார் வெண்ணிலாவே
கள்ளமில்லா உள்ளமெற்கும் வெண்ணிலாவே - என்றன்
கர்த்தர்அருள் வாரேசொல்வாய் வெண்ணிலாவே

ஒன்றுமேபு ரியவில்லை வெண்ணிலாவே - நீதான்
ஓர்வழியெற் கோதுவாயோ வெண்ணிலாவே
சென்றென்நி லையையவர்க்கே வெண்ணிலாவே - சற்று
செப்பியிங்க ழைத்துவாராய் வெண்ணிலாவே

பத்தரெதிர் தோன்றுவாராம் வெண்ணிலாவே - உண்மைப்
பத்திசெய்யக் கற்றிலேனே வெண்ணிலாவே
உத்தமர்கள் காண்பாரென்பார் வெண்ணிலாவே - யானும்
உத்தமகுணம் பெற்றிலேன் வெண்ணிலாவே

பித்துகொண்டு வாடுகின்றேன் வெண்ணிலாவே - அவர்
பிச்சியென்முன் தோன்றுவாரோ வெண்ணிலாவே
முத்தமிட நாடுகின்றேன் வெண்ணிலாவே - அவரென்
முத்தம்விழைந் தென்றுறுவார் வெண்ணிலாவே

சத்தமடங் கும்இடத்தே வெண்ணிலாவே - அவர்
சார்ந்தமர்வார் என்றுசொல்வார் வெண்ணிலாவே
சத்தமடங் கும்இடத்தை வெண்ணிலாவோ - அவர்
சற்றெனக்கும் காட்டுவாரோ வெண்ணிலாவே

கண்ணின்மணி யானுரென்பார் வெண்ணிலாவே - அவரைக்
காண்பதெவ்வா றென்றுசொல்வாய் வெண்ணிலாவே
உண்ணின்ருெளி ருண்மையென்பார் வெண்ணிலாவே - அவர்
உண்மையுருக் காண்பதென்ருே வெண்ணிலாவே

பண்ணின்மறை பாடுவாராம் வெண்ணிலாவே - அவர்
பாடுமறை கேட்கவேண்டும் வெண்ணிலாவே
எண்ணல்பொரு ளானுரென்பார் வெண்ணிலாவே - அவரை
எப்படியான் காண்பதோசொல் வெண்ணிலாவே

வானவரும் காணுரென்பார் வெண்ணிலாவே - அவரை
வாடிடும்யான் காணுவேனே வெண்ணிலாவே
மோனமொழி கூறியென்றன் முன்வந்தணைத்தே - இன்ப
முத்தியெனக் கீவாரோடி வெண்ணிலாவே

## அருள் திறம் போற்றல்

ஓமெனும் எழுத்தினின் றுதிக்கும்அண் டகோடிகள்
ஓமெனும் எழுத்தினுள் ஓடுங்கும்அண் டகோடிகள்
ஓமெனும்எழுத் தையுன்னி யோகஞானம் பேணுவோர்
ஓமென விளங்குநின் பதத்திலொன் றிஉய்வரே

காமம்கோப மாதிநீக்கும் கர்த்தநின்தா ளுன்னியே
ஓமெனும் எழுத்திலொன்றி உண்மையாய்த் தவம் செய்வோர்
தோமில்ஞான வான்களாகித் தூய்மையோ டொளிருவர்
மாமறைகள் போற்றுநின்றன் மாணடி யடைவரே

வேதமாகி யெங்கணும் விளங்கியாட்சி செய்யும்நின்
பாதபங்க யத்தையுன்னிப் பாரில்வாழும் பத்தர்கள்
கோதில்ஞான வாழ்வைஇக் குவலயத்திற் பேணுவர்
ஏதமில்நன் முத்தியெய்தி இன்பம்துய்ப்பர் உண்மையே

தேவதேவ ஞனநின் திருவருள் துணைகொடே
ஓவிலன்பி னேடுநிட்டை ஊக்கமாய்ப் புரிந்திடின்
பூவிலின்பம் துய்க்கலாம் புகழ்மிகப்பெற் றுய்யலாம்
சேவடியி லொன்றிமுத்திச் செல்வமெய்த லாகுமே

கர்த்தநின் பதத்திலொன்றத் தக்ககல்வி கற்றவர்
நித்யநிட்டை பேணிஇன்ப நிறைவடைந்து வாழ்வரால்
சத்யமார்க்க மானநின்றன் சட்டம்பேணு மன்பர்கள்
முத்தியின்ப மெய்துவார்கள் மூதறிஞர் போற்றவே

நின்னுளே அனந்தகோடி அண்டமும் நிலாவுமால்
என்னுள்நீமெய் யின்பமாய் இலங்குகின்ற தற்புதம்
பொன்னுளே நெருப்புளே பொலியும்செங் கதிர்க்குளே
மின்னுளே விளங்குகின்ற மெய்யனே அருள்கவே

ஏதுநான் நினைத்திட்டாலும் நின்னரும் எனக்கொள்வேன்
ஏதுநான் மொழிந்திட்டாலும் நின்னருள்
எனக்கொள்வேன்
ஏதுநான் புரிந்திட்டாலும் நின்னருள் எனக்கொள்வேன்
யாதும்நின் னருளினல் நடக்கும்என்ப துண்மையே

செங்கைகூப்பி யன்பர்நின் திருவடி தொழுதுய்வார்
துங்கமாம்நின் ஜோதிகண்டு யோகியர் துதித்துய்வார்
எங்கணும்நின் காட்சிகண்டு ஞானியர் இறைஞ்சுவார்
பொங்குநின் னருள்எனைப் புரப்பதுன்னின் இன்பமே

எந்தநாளும் நின்னருள் எனைப்புரப்ப துண்மையாம்
சந்ததம்நீ என்னுளே தழைந்திலங்கி யாள்கிறாய்
அந்தமாதி யற்றநின் னருளினல்யான் வாழ்கிறேன்
சொந்தமாய்நீ என்னையாண்ட சூக்குமம்என் சொல்வனே

## போற்றி நன்று உய்வமே

அண்டங் கள்பல கோடி அமைப்பவன்
பண்டங் கள்பல கோடி படைப்பவன்
எண்தங் கின்னுயிர் யாவும் புரப்பவன்
புண்ட ரீகத்தாள் போற்றிநன் றுய்வமே

உள்ளன் போடும் வழிபடு வோர்கள்தம்
உள்ளம் கொள்ளைகொள் ஒப்பில் பராபரன்
கள்ளம் நீக்கிக் கருணை புரிபவன்
எள்ளல் இன்றி எனையாள் இறைவனே

அன்பு கண்டறி யாத எனக்குத்தன்
பொன்புரை சட்டம் நல்கிப் புரப்பவன்
அன்பு ரைகள் அருளி மணந்தனன்
இன்ப மேவடி வான இறைவனே

கட்டுக் காவலொன் றின்றிக் கலங்கிய
துட்ட னேற்கும்தன் தூநெறி நல்கினன்
எட்டி ஞேடு மிரண்டும் விளக்கினேன்
மிட்டில் பேரின்ப மாமண வாளனே

என்றன் செய்கையிங் கேது மில்லையென
நன்றவன் செய லாக்கொண்ட நாயகன்
குன்று நேர்வினை யாவும் குமைத்தனன்
என்றும் பேரின்ப மீந்தரு ளீசனே

உத்த மர்தம் உளத்திற் பொலிபவன்
பத்தி யூட்டிமெய்ஞ் ஞானம் பாவிப்பவன்
சுத்தி செய்தெனைத் தூமணம் கொண்டனன்
பத்தர் ஞானியர் பார்மிசை வாழ்த்தவே

என்னைத் தன்னடி யானென ஏற்றவன்
அன்னை அத்தன் குருதெய்வ மானவன்
முன்னை வல்வினை மோசிந் தருளினன்
தன்னை யெற்குத் தரும்மண வாளனே

என் பிழைகள் பலவும் மன்னிப்பவன்
தன்பதத் தொளி காட்டும் தயாபரன்
இன்ப நன்மணம் கொண்டெனை யீர்த்தனன்
அன்பர் சூழ்ந்திவ் வவனியில் வாழ்த்தவே

நுட்பம் யாவும் உணர்த்திடும் நோன்மையன்
உட் பொலியும்பே ருண்மை விளக்குநன்
சட்பு லன்காணப் போந்து மணந்தனன்
திட்ப மிக்க செழுந்தவ மீயவே

வாது கொண்ட மனத்தர்க் கரியவன்
போது கொண்டு பூசிப்பவர் பாங்கினன்
பாதம் போற்றப் பணித்து மணந்தனன்
ஆதி யந்த மிலாஅரு ளாளனே

செல்வம் யாவையும் நல்கருட் தேசிகன்
கல்வி யின்பய ஞெயொளிர் காவலன்
வல் வினைகள் தவிர்த்து மணந்தனன்
பல்வ ளங்களு மீந்து பாவிக்கவே

என்னை யென்றும் பிரியா திருப்பவன்
தன்னை யன்பர்க்குத் தந்து மகிழ்பவன்
என்னை நன்மணம் கொண்டின்ப மூட்டினன்
மின்னை நேரொளி மேனிகொள் மெய்யனே

## கீர்த்தனை-1

### பல்லவி

பாதம் சேர்த்தருள்வீர் - நும்மலர்ப்
பாதம் சேர்த்தருள்வீர்

### அனுபல்லவி

வேதம் கோடிபல் கோடியும் போற்றிடப்
போதமரார் நெறி பூமிக்கருளினீர் (பாதம்)

### சரணம்

பூதமைந்தொடு பொறிபுலன் யாவையும்
பேதம் கொண்டிவண் பேதுறு முயிர்களும்
சூதும் பொய்யும் கொண்டேயுழல் தூர்த்தரும்
வாதம்செய் சமயத்தரும் காணெணுப் (பாதம்)

ஊனம் யாவும் ஒழித்த பெரியரும்
ஞான மன்றினில் நடனம்காண் போர்களும்
மோன நன்னிலை முற்றிய முத்தரும்
வானம் மேவிநல் வாழ்த்து மொழிந்திடப் (பாதம்)

சந்திர சூரியர் தாம்மகிழ் வெய்திட
அந்தர வாத்தியம் முழங்க அமரரும்
சுந்தர மலர் சொரிய நல்லடியவர்
அந்தமில் மகிழ்வெய்த ஆனந்தமாம் (பாதம்)

## கீர்த்தனை-2

### பல்லவி

உண்டு நமக்கோர் துணையே - குருநாதன் என்
றுண்டு நமக்கோர் துணையே

## அனுபல்லவி

அண்டர் முனிவர்களும் அறியவொண்ணு மகிமை
தொண்டர் அறிவார் என்று சொல்லும் உண்மை நம்பினுல்
(உண்டு)

## சரணம்

கண்டவை யெல்லாம்தின்று வந்தவையெல்லாம் பேசி
பண்டம் எல்லாமும்தேடிப் பாவமூட்டை கட்டாமல்

சிட்டர்களும்புகழ் சட்டமொன்றைத்தரும்
இட்டசற்குருபரன் திட்டப்படி நடந்தால் (உண்டு)

பொய்யணுவும் கூறுமல் புன்மைச்செயல் நாடாமல்
வையகத்தெவ்வுயிரும் வாழ்கவென்றே நினைந்து

மலர்கொடு மலரடி பலமுறை பரவிட
நலமிகும் மனமிசை பலநினைவு களுளும் (உண்டு)

வேதமுடிவையெல்லாம் ஏதமற உணர்ந்து
பூதலத் தோர்களுய்யத் தீதில் நெறியாய்த்தந்து

பரவிடும்அடியவர் பரிவு மிகுமனதில்
அருளுரு வொடுதிகழ் குருவென உணர்வுறின் (உண்டு)

## அடியவர் துதி

அண்டம் யாவும் அளித்துப் புரந்தருள்
விண்ட தூமறை வாயன்ஒண் மெய்ந்நெறி
கண்டருள் குரு காதல டியராம் 1
தொண்டர் பாதமலர் சிரம் சூடுவோம்

இத்தரைக்கொர் இனிய சட்டந் தரும்
அத்தனுக்குப் பொருளுடல் ஆவியைத்
தத்தமாக அளித்துச் சரணடை 2
பத்தர் பாதமலரைப் பரவுவாம்

எத்திசையும் புகழ் சட்ட மீந்தருள்
சித்தர் சேவடி யேத்திச் சிறந்திடும்
பத்தர் தம்பதம் பற்றிப் பரவியே 3
முத்தி யெய்த முயலுவம் நாளுமே

சட்டச் செந்நெறி சார்ந்து தினந்தொறும்
இட்டமாய் வைகலிற் றண்ணீ ராடிடும்
சிட்டர் பாதம் தெரிசித்துத் தீவினை
கெட்டொ ழியக்கி ருபைமிக் கெய்துவாம் 4

நூய சட்டமித் தொல்புவிக் கீந்தருள்
நாயகன் பதம் நன்று பராவிடும்
ஏயசீரன்பர் இன்னடி போற்றியே
மேய வல்வினை வீட்டி விளங்குவாம் 5

இன்ப நன்னெறி இப்புவிக் கீந்தருள்
மன்பெ ருங்குரு மாணடி போற்றிடும்
அன்பர் பாதம் அகத்திற்கொண் டேத்தியே
துன்பம் யாவும் தொலைத்தரு ளெய்துவாம் 6

சுற்றமாயி வண்சூழ்ந்து சட்டந்தரும்
நற்றவன் பதம் நாளும் பராவியே
பற்றனைத்தும் ஒழித்த மெய்ப் பத்தர்தாள்
பற்றி யின்பப் பயன்துய்த்து மேவுவாம் 7

என்றுமெய் யின்ப மீந்தருள் சட்டத்தை
நன்று பூமிக்கு நல்கும் குருபதம்
என்று மேத்திடும் இன்னடியார் பதம்
நன்று போற்றி நலங்கள டைந்துய்வாம் 8

வேதம்யாவும் விளக்கு மொண் சாரத்தைத்
தீதில் நன்னெறி யாத்தரும் சித்தர்தாள்
கோதிலன் பொடும் கும்பிடும் பத்தர்சீர்
ஓதியின்ப வொளி பெற்று மேவுவாம் 9

இம்மை யம்மையெ லாம்தரும் சட்டத்தைச்
செம்மை யாயருள் சிட்டர்பதம் பற்றி
மும்மை வெம்மலம் மோசித்துய் பத்தர்தாள்
எம்மை யாண்டின்பம் யாவும் வழங்குமால் 10

அன்பு நன்னெறி யார்வமுடன் அருள்
பொன் பிறங்கு புனிதக் குருபரன்
இன்பத் தாண்மலர் ஏத்தும் அடியர்தாட் (கு)
அன்பொடே தொண்டு செய்தரு ளெய்துவாம் 11

தூம றைமுத லாகத் துலங்கிடும்
ஓமெ ழுத்துள் ளுறையும் குருபதம்
சேம மென்று தினம் தொழுமன் பர்தாள்
நாமி றைஞ்சி நலம்பல பெற்றுய்வாம். 12

## பிரார்த்தனை

பரம சற்குருவே !

1. உம்மை மறக்கச் செய்யும் எந்த ஒரு பொருளும் என்னையணுகா தொழிக.

2. உமது திருவருளை நினைவூட்டும் ஓர் அற்பப் பொருளையும் யான் போற்றி மகிழ்வேனாக.

3. காமமாதி கொடும் பேய்களெல்லாம் என் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளா வண்ணம் நீர் காத்தளிப்பீராக.

4. கருணையாம் உமது அருள் வெள்ளத்தில் யான் அமிழ்ந்து மூழ்குவேனாக.

5. செய்யும் செயல்களுக்கு யான் அதிகாரி இல்லை என்று உணர்த்துவீராக.

6. நன்மையும், தீமையும் நாயகன் அருள் என்று நாடுவேனாக.

7. புன்மைதரு புவனப் பொருள்களையெல்லாம் விரும்பாது ஒழிவேனாக.

8. கொலைஞராயினும் உமது அடியாரை நீர் என எண்ணிப் போற்றுவேனாக.

9. என் உடல் பொருள் ஆவி அனைத்தையும் உமக்கே அர்ப்பணம் செய்தேன்.

10. என்றெனைக் காப்பீர் ! காப்பீர் !! காப்பீர் !!!

ஆண்டவர் அருள்.

# அருட்சுட்ட நெறியின் சிறப்பு இயல்புகள்

1. விடியல் நான்கு மணிக்குப் பச்சை நீரில் முழுகுதல்.
2. வெந்நீரைப் பயன்படுத்தாமை.
3. இறைவழிபாடு ஆற்றுதல்.
4. ஒருவனே தெய்வம் என்று நம்புதல்.
5. பிறமதங்களை நிந்திக்கா திருத்தல்.
6. மரக்கறி உணவையே கொள்ளுதல்.
7. பஞ்சமா பாதகம் தவிர்த்தல்.
8. மருந்து அருந்தாமல் இறையருள் துணை கொண்டே நோய்களை நீக்கிக் கொள்ளுதல்.
9. ஜோதிடம் மாந்த்ரீகம் நாடாமை.
10 பிரார்த்தனை செய்து கொள்ளாமை.
11. அறமன்றம் அணுகாமை.
12. இறந்தவர்க்கு இரங்காமல், தீக்கிரையாக்காமல் மண்காப்பு செய்தல்
13.. வெள்ளிக்கிழமை விரதம் பேணல்.
14. தினமும் அரைமணி நேரமாவது அருள் நிட்டை புரிதல்.
15. உடல், பொருள், ஆவி அனைத்தையும் இறைவனிடம் ஒப்படைத்து, அருள் வாழ்வு ஆற்றுதல்.
16. இறைவன் அருளால் எய்தும் நலங்களை ரகசியமாகப் பேராற்றிக் காத்தல்.



அம்பாள் பிரிண்டர்ஸ், சேலம்-636 002. போன் : 51568